# காலக் குறிப்புகள்


நாடகப் பேராசிரியர்,

**ப. சம்பந்த முதலியார், பி.ஏ., பி.எல்.**

அவர்களால் இயற்றப்பட்டது


இவர் எழுதிய மற்ற நூல்கள்

*லீலாவதி — சுலோசனை, சாரங்கதரன், மகபதி, காதலர் கண்கள், நற்குல தெய்வம், மனோஹரன், ஊர்வசியின் சாபம், இடைச்சுவர் இருபுறமும், என்ன நேர்ந்திடினும், விஜயரங்கம், கள்வர் தலைவன், தாசிப்பெண், மெய்க்காதல், பொன் விலங்குகள், சிம்ஹளநாதன், விரும்பிய விதமே, சிறுத்தொண்டர், காலவ ரிஷி, ரஜபுத்ரவீரன், உண்மையான சகோதரன், சதி-சுலோசனா, புஷ்பவல்லி, கீதமஞ்சரி, உத்தமபத்தினி, அமலாதித்யன், சபாபதி முதற்பாகம், பொங்கல் பண்டிகை அல்லது சபாபதி இரண்டாம் பாகம், ஓர் ஒத்திகை அல்லது சபாபதி மூன்றும் பாகம், சபாபதி நான்காம் பாகம், பேயல்ல பெண்மணியே, புத்த அவதாரம், விச்சுவின் மனைவி, வேதாள உலகம், மனைவியால் மீண்டவன், சந்திரஹரி, சுபத்திரார்ஜுனா, கொடையாளி கர்ணன், சஹதேவன் சூழ்ச்சி, நோக்கத்தின் குறிப்பு, இரண்டு ஆத்மாக்கள், சர்ஜன் ஜெனரல் விதித்த மருந்து, மாளவிகாக்னி மித்ரம், விபரீதமான முடிவு, சுல்தான்பேட்டை சப் அஸிஸ் டென்ட் மாஜிஸ்டிரேட், சகுந்தலை, காளப்பன் கள்ளத் தனம், விக்ரமோர்வசி, முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும், நாடக மேடை நினைவுகள்—ஆறு பாகங்கள், நாடகத் தமிழ், யயாதி, பிராமணனும் சூத்திரனும், வாணிபுர வணிகன், இரண்டு நண்பர்கள், சத்ருஜித், ஹரிச்சந்திரன், மார்க்கண்டேயர், ரத்னவளி, கண்டுபிடித்தல், கோனேரி அரசகுமாரன், சந்தையில் கூட்டம், வைகுண்ட வைத்தியர், தீட்சிதர் கதைகள், ஹாஸ்யக் கதைகள், குறமகள், கல்லத்தங்காள், சிறுகதைகள், நடிப்புக்கலையில் தேர்ச்சி பெறுவதெப்படி? ஹாஸ்ய வியாசங்கள், தமிழ் பேசும் படக்காக்ஷி, விடுதிப்புஷ்பங்கள், பேசும்பட அனுபவங்கள், வள்ளி மணம், கதம்பம், மாண்டவர் மீண்டது, ஆஸ்தானபுரம் நாடகச் சபை, சங்கீதப் பயித்தியம், ஒன்பது குட்டி நாடகங்கள், சபாபதி ஜமீன்தார், சிவாலயங்கள் இந்தியாவிலும் அப்பாலும், முதற்பாகம்—இரண்டாம் பாகம், சிவாலய சிற்பங்கள், சதி சக்தி, மனை ஆட்சி, இந்தியனும் ஹிட்லரும் முதலியன.*

2.00


முதற் பதிப்பு

காபிரைட்] 1947 [விலை

# காலக் குறிப்புகள்

நாடகப் பேராசிரியர்

**ப. சம்பந்த முதலியார், பி.ஏ., பி.எல்.**

*அவர்களால் இயற்றப்பட்டது*

இவர் எழுதிய மற்ற நூல்கள்

லீலாவதி — சுலோசனை, சாரங்கதரன், மகபதி, காதலர் கண்கள், நற்குல தெய்வம், மனோஹரன், ஊர்வசியின் சாபம், இடைச்சுவர் இருபுறமும், என்ன நேர்ந்திடினும், விஜயரங்கம், கள்வர் தலைவன், தாசிப்பெண், மெய்க்காதல், பொன் விலங்குகள், சிம்ஹளநாதன், விரும்பிய விதமே, சிறுத்தொண்டர், காலவ ரிஷி, ரஜபுத்ரவீரன், உண்மையான சகோதரன், சதி-சுலோசனை, புஷ்பவல்லி, கீதமஞ்சரி, உத்தமபத்தினி, அமலாதித்யன், சபாபதி முதற்பாகம், பொங்கல் பண்டிகை அல்லது சபாபதி இரண்டாம் பாகம், ஓர் ஒத்திகை அல்லது சபாபதி மூன்றும் பாகம், சபாபதி நான்காம் பாகம், பேயல்ல பெண்மணியே, புத்த அவதாரம், விச்சுவின் மனைவி, வேதாள உலகம், மனைவியால் மீண்டவன், சந்திரஹரி சுபத்திரார்ஜுன, கொடையாளி கர்ணன், சஹதேவன் சூழ்ச்சி, நோக்கத்தின் குறிப்பு. இரண்டு ஆத்மாக்கள், சர்ஜன் ஜெனரல் விதித்த மருந்து, மாளவிகாக்னி மித்ரம், விபரீதமான முடிவு, சுல்தான்பேட்டை சப் அஸிஸ் டென்ட் மாஜிஸ்டிரேட், சகுந்தலை, காளப்பன் கள்ளத் தனம், விக்ரமோர்வசி, முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும், நாடக மேடை நினைவுகள்—ஆறு பாகங்கள், நாடகத் தமிழ், யயாதி, பிராமணனும் சூத்திரனும், வாணீபுரவணிகன், இரண்டு நண்பர்கள், சத்ருஜித், ஹரிச்சந்திரன், மார்க்கண்டேயர், ரத்னவளி, கண்டுபிடித்தல், கோனேரி அரசகுமாரன், சந்தையில் கூட்டம், வைகுண்ட வைத்தியர், தீட்சிதர் கதைகள், ஹாஸ்யக் கதைகள், குறமகள், நல்லதங்காள், சிறுகதைகள், நடிப்புக்கலையில் தேர்ச்சி பெறுவதெப்படி? ஹாஸ்ய வியாசங்கள், தமிழ் பேசும் படக்காக்ஷி, விடுதிப்புஷ்பங்கள், பேசும்பட அனுபவங்கள், வள்ளி மணம், கதம்பம், மாண்டவர் மீண்டது, ஆஸ்தானபுர நடகச் சபை, சங்கீதப் பயித்தியம், ஒன்பது குட்டி நாடகங்கள், சபாபதி ஜமீன்தார், சிவாலயங்கள் இந்தியாவிலும் அப்பாலும், முதற்பாகம்—இரண்டாம் பாகம், சிவாலய சில்பங்கள், சதி சக்தி, மனை ஆட்சி, இந்தியனும் ஹிட்லரும் முதலியன.

2.00

முதற் பதிப்பு

காபிரைட்] 1947 [விலை

# முன்னுரை



1891-ம் வருஷம் நான் எழுத்தாளன் ஆக வேண்டுமென்று ஆசைப்பட்டது முதல், நமது தேசத்திலும், முக்கியமாக தமிழ் நாட்டிலும் உண்டான முக்கிய சம்பவங்களில் காலங்களையும், தமிழ் நூல்கள் எழுதப்பட்ட காலங்களையும், குறித்துக்கொண்டு வந்தேன். இது பிற்காலம் நான் ஒரு நூலாசிரியனாக ஆனபோது எனக்கு மிகவும் உபயோகமாயிருந்தது. ஆகவே தமிழ் மாணவர்களுக்கும், எழுத்தாளர்க்கும் கொஞ்சம் உபயோகப்படக்கூடுமென்று இச்சிறு நூலைப் பிரசுரிக்கலானேன். இந்நூல் தமிழ் நாடகங்கள் எழுதுவோர்க்கும், பேசும் படக் காட்சிகளுக்கு ஸினேரியோ (Scenario) தயாரிப்பவர்களுக்குங்கூட பயன்படும் என்று நினைக்கிறேன்.

சரித்திரமுகமாய் நிர்ணயிக்கப்பட்ட குறிப்புகள் தவிர மற்றவைகளுக்கெல்லாம் இன்னாருடைய அபிப்பிராயம் என்பதைக் குறித்துள்ளேன்.

இதில் பல தமிழ் நூல்களின் காலமும், புலவர்களின் காலமும் விட்டுப் போயிருக்கலாம். ஆகவே இதை வாசிக்கும் தமிழ் அபிமானிகள் அவற்றை எனக்கு அறிவித்தால், வணக்கத்துடன் அவைகளை ஏற்று, இரண்டாம் பதிப்பில் அவைகளை அச்சிடக் காத்திருக்கிறேன்.

ப. சம்பந்தம்.

இந்நூல்

பம்மல் - விஜயரங்க முதலியார்

பம்மல் - மாணிக்க வேலம்மாள்

ஆகிய

என் தந்தை தாயருடைய ஞாபகார்த்தமாக
அச்சிடப்பட்டது.

# காலக் குறிப்புகள்



**அக்பர்**—வடஇந்தியாவிலாண்ட மொகலாயச் சக்ரவர்த்தி, ஆண்ட காலம் கி.பி. 1556-1605.

**அகராதி நிகண்டு**—ரேவண சித்தர் இயற்றிய நூல் கி.பி. 1594 (வையாபுரி பிள்ளை.)

**அகஸ்தியர்**—தமிழுக்கு அகத்தியம் எனும் இலக்கண நூல் இயற்றியவர் கி.மு. 700 (?)

**அச்சுதப்ப நாயக்கர்** — தஞ்சாவூரிலாண்ட நாயக்க அரசர்: இவருக்குச் சின்னசேவப்ப அச்சுத நாயக்கர் என்றும் பெயர்—கி.பி. 1577-1614.

**அச்சுத ராயர்**—விஜயநகர் அரசர், ஆண்ட காலம் கி.பி. 1529-1542

**அசோகர்**—ஏறக்குறைய இந்தியா முழுதும் ஆண்ட சக்ரவர்த்தி, ஆள ஆரம்பித்தது சுமார் கி.மு. 272—கலிங்க யுத்தம் கி.மு. 262, பௌத்த மதத்தைச் சார்ந்தது கி.மு. 240—மரணம் கி.மு. 237. இவர் ஆண்ட காலம் கி.மு. 274—226 என்று எஸ். திருவேங்கடாசாரியார் எம்.ஏ., எல்.டி. அபிப்பிராயப்படுகிறார்.

**அடிமை அரசர்கள்**—டில்லியில் ஆண்ட மகம்மதிய அரசர்கள், ஆண்ட காலம் கி.பி. 1206-1290.

**அதர்வண வேதம்**-நான்கு வேதங்களில்ஒன்று, தொகுக்கப்பட்ட காலம் சுமார் கி.மு. 1500.

**அதிமதுர கவிராயர்**—கி.பி. 15-ஆம் நூற்றாண்டிலிருந்தவர். (தமிழ் லெக்சிகன் அகராதி)

**அதிவீரராம பாண்டியன்**—தமிழ் நைடத ஆசிரியர்—எழுதிய காலம் கி.பி. 1562-1567.

**அந்தகக்கவி வீரராகவ முதலியார்**—கழுக்குன்றப்புராண ஆசிரியர், கி.பி. 17-ஆம் நூற்றாண்டு (தமிழ் அகராதி)

**அநந்தபாரதி ஐயங்கார்**—*உத்தர ராமாயணக் கீர்த்தனை பாடியவர், கி.பி.* 1786-1846.

**அபராஜிதன்**—*பல்லவ அரசன் தென் இந்தியாவில் ஆண்ட காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு.*

**அபிராம வரதுங்கராமன்**—*பாண்டிய அரசன், சுமார் கி.பி.* 1586 (*கவர்ன்மெண்ட் எபிக்ராபிஸ்ட்.*)

**அபிராமி பட்டர்**—*அபிராமி அந்தாதி பாடியவர், கி.பி.* 18-*ஆம் நூற்றாண்டு.*

**அமராவதிஸ்தூபம்** — *பௌத்த கட்டடம் - இவ்வூரின் பழய பெயர் தான்ய கடகம். ஒரு காலம் ஆந்திர அரசர்களுடைய முக்கிய பட்டணமா யிருந்தது. ஸ்தூபம் ஆரம்பிக்கப்பட்டது கி. மு.* 200; *ஸ்தூபத்தைக் கருங்கல்லால் மூடியது சுமார் கி.பி.* 100-*கிராதிகளின் சில்பம் கி. பி.* 150-200 *வெளிக்கிராதிகள் கி. பி.* 200-250.

*பெர்கூசன் துரை—இந்த ஸ்தூபம் கி.பி. முதல் நூற்றாண்டில் கட்டப்பட்டதாக எண்ணுகிறார்.*

**அமிர்த கவிராயர்**—*ஒரு துறைக்கோவை பாடியவர். காலம் கி.பி.* 1649-1685.

**அமுதனார்**—*ராமானுஜ நூற்றந்தாதி பாடியவர். சுமார் கி.பி.* 1017.

**அமோகவர்ஷன்**—*ராஷ்டிரகூட அரசன், கி.பி.* 815-877.

**அர்த்த சாஸ்திரம்**—*சாணக்கியர் சம்ஸ்கிருதத்தி லெழுதிய நூல். கி.பி. நான்காம் நூற்றாண்டு,* (*பி.டி. ஸ்ரீனிவாச ஐயங்கார்*)

**அரசகேசரி**—*தமிழ் ரகுவம்சம் ஆசிரியர், கி.பி.* 15-*ஆம் நூற்றாண்டு.*

**அரிகேசரி பராக்கிரம பாண்டியன்**—*பாண்டியஅரசன், காலம் சுமார் கி பி.* 1422 (*கவர்ன்மெண்ட் எபிக்ராபிஸ்ட்*)

**அரிகேசரி மாறவர்மன்**—*பாண்டிய அரசன், திருஞான சம்பந்தர் காலத்தவன், சுமார் கி.பி.* 650.

**அரிச்சந்திர புராணம்**—வீரை ஆசு கவிராயர் பாடியது. அரங்கேற்றிய காலம் கி.பி. 1524.—கி.பி. 1526 (அந வரத விநாயகம் பிள்ளை)

**அரிஞ் செயன்**—சோழ அரசன் கி.பி. 954.

**அரிதாசர்**—இருசமய விளக்கம் ஆசிரியர், கி.பி. 1750.

**அருணகிரிநாதர்**—திருப்புகழ் பாடியவர் கி.பி. 15-ஆம் நூற்றாண்டு, கி.பி. 1477.

**அருணகிரி புராணம்**—மறைஞான சம்பந்தர் இயற்றிய நூல், கி.பி. 1555 (திரு-அநவரதவிநாயகம் பிள்ளை)

**அருணந்தி சிவாசாரியார்**—சிவஞான சித்தியார் ஆசிரியர், சுமார் கி.பி. 1253.

**அருணசலக் கவிராயர்**—ராமநாடகக் கீர்த்தனை ஆசிரியர், கி.பி. 1712-1779.

**அரும்பொருள் விளக்க நிகண்டு**—எழுதப்பட்ட காலம் சுமார் கி.பி. 1760 (திரு. வையாபுரி பிள்ளை)

**அலெக்சாண்டர்**—கிரேக்கஅரசன், இவன்பெயர் சிகண்டர் என்று மருவியுளது. இந்தியாவின்மீது படையெடுத்தது கி.மு. 327-325.

**அவிரோத உந்தியார்**—ஓர் வேதாந்த நூல், சாந்தலிங்க சுவாமிகள் இயற்றியது. கி.பி. 18-ஆம் நூற்றாண்டு.

**அழகன் பெருமாள் குலசேகரன்**—காலம் கி.பி. 1430 (கவர்ன்மென்ட் எபிக்ராபிஸ்ட்)

**அனபாயசோழன்**—சோழ அரசன், இவனுக்கு ராஜ கேசரி வர்மன் என்றும் குலோத்துங்கன் என்றும் பெயர் உண்டு. கி.பி. 1063-1112 (டி. எ. ராமலிங்க செட்டியார்).

**அனுராஜபுரம்**—அனுராதபுரம் என்றும் பெயர். லங்கையில் ராஜதானியா யிருந்தது. ஸ்தாபிக்கப்பட்டது கி.மு. 410 அழிக்கப்பட்டது கி.பி. 1109.

**அஜாதசத்ரு**—வட இந்திய அரசன்—ஆட்சி ஆரம்பம் கி.மு. 491, பாடலிபுரம் இவன் காலத்தில் அமைக்கப் பட்டது.

**அஜெண்டா சித்திரங்கள்**—வரையப்பட்ட காலம் கி.பி. 450-650.

**அஹல்யாபாய்**—வட இந்தியாவிலிருந்த ஓர் மாதரசி, மரணம் கி.பி. 1795.

**ஆகம காலம்**—கி.பி. 9-ஆம் நூற்றாண்டு முதல் 12-ஆம் நூற்றாண்டு வரையில்.

**ஆங்கிலேயர்களுக்கும், பிரெஞ்சுக்காரர்களுக்கும்** — தென் இந்திய யுத்தம் கி.பி. 1746-1761 (ஸி.எஸ். ஸ்ரீனிவாசாசாரியார்)

**ஆண்டாள்**-அல்லது சூடிக்கொடுத்த நாய்ச்சியார் வைஷ்ணவ கிரந்தமாகிய நாலாயிர பிரபந்தத்தில் சில பாசுரங்கள்பாடிய பெண்மணி. காலம் கிபி. 731 (மு. ராகவ ஐயங்கார்) பிறந்தது கி.பி. 716 (வி. ராமசந்திர தீட்சிதர்)

**ஆண்டிப் புலவர்**—நிகண்டு ஆசிரியர் கி.பி. 17-ஆம் நூற்றாண்டு.

**ஆத்மநாத தேசிகர்** — சோழமண்டல சதக ஆசிரியர் கி.பி. 1650-1728-க்குள்ளாக.

**ஆதித்த கரிகாலன்** — அல்லது இரண்டாம் ஆதித்தன், இவனுக்குப் பொன்மாளிகைத் துஞ்சியதேவன், என்றும், ராஜராஜ குலசேகரன் என்றும் பெயர்கள் உண்டு. காலம் சுமார் கி.பி. 966—970 (சோமசுந்தர தேசிகர்)

**ஆதித்தன் I**—தமிழ்நாட்டில் ஆண்ட ஓர் சோழ அரசன் கி.பி. 871-907.

**ஆதியப்ப நாவலர்**—மாயவர ஸ்தல புராணம் பாடியவர் கி.பி. 1580 (திரு. டி. செல்வகேசவராய முதலியார்)

**ஆந்திரர்கள்**—ஆளுகை கி.மு. 200, கி.பி. 225 (ஸி. எஸ். ஸ்ரீனிவாசாசாரியார்) கி.பி. 1—200 (ஸ்ரீ எம். துரைசாமி).

**ஆர்க்காடு**—(ஆறுகாடு) கிளைவ் முற்றுகை, கி.பி. 1751.

**ஆரியர்கள்**—முதல் முதல் இந்தியாவிற்கு வந்தது. சுமார் 5500 வருடங்களுக்குமுன் அதாவது கி.மு. 3600. (ம. துரைசாமி) - கி.மு. 1500 (சர். ஆர்தர் கெயிட்)

கி.மு. 3500-2500 (ஸ்ரீ சி. எஸ். ஸ்ரீனிவாசாசாரியார்). தென் இந்தியாவிற்கு இவர்கள் முதல் முதல் வந்தது. கி.மு. 550-400 (உலக சரித்திரம்)

**ஆரூர் புராணம்**—இயற்றப்பட்ட காலம் கி.பி. 1593 (திரு அநவரத விநாயகம் பிள்ளை)

**ஆல்புரீனி**—இந்தியாவைப்பற்றி எழுதியுள்ள மேல்நாட்டு ஆசிரியர் கி.பி. 970-1038

**ஆறுமுக நாவலர்**—யாழ்ப்பாணவாசி, பெரிய புராண வசனம் முதலிய வசன நூல்கள் எழுதியவர் கி.பி. 1822—1870 (1879?)

**ஆறுமுக ஸ்வாமிகள்**—தமிழ் நிஷ்டானுபூதி ஆசிரியர் கி.பி. 6-ஆம் நூற்றாண்டு.

**இட்சிங்**—சீனப் பிரயாணி, இந்தியா பிரயாணம் கி.பி. 671-695.

**இரட்டையர்**—குருடரும் முடவருமான இரண்டு புலவர்கள், தில்லைக் கலம்பகம் பாடியவர்கள் கி.பி. 15-ஆம் நூற்றாண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**இரத்தினக் கவிராயர்**—புலவர் ஆற்றுப்படை ஆசிரியர் - இந்நூல் கி.பி. 1692ல் அரங்கேற்றப்பட்டது.

**இராமாயணம்**—வால்மீகியால் சம்ஸ்கிருதத்தில் எழுதப்பட்டது. சுமார் காலம் கி.மு. 500 (வின்சென்ட் ஸ்மித்)

**இருபா இருபஃதுறை**—நமச்சிவாயத் தம்பிரான் இயற்றியது கி.பி. 1678.

**இலக்கணக்கொத்து**—சுவாமிநாத தேசிகர் இயற்றியது கி.பி. 17-ஆம்நூற்றாண்டு (தமிழ் லெச்சிகன் அகராதி)

**இலக்கண விளக்கச் சூறாவளி**—சிவஞான முனிவர் இயற்றியது கி.பி. 18-ஆம் நூற்றாண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**இலக்கண விளக்கம்**—வைத்யநாத தேசிகர் இயற்றியது. கி.பி. 17-ம் நூற்றாண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**இறையனார் அகப்பொருள்** — கி.பி. 735 (கனகசுந்தரம் பிள்ளை) இதற்கு உரை எழுதியவர் முசிறி நீலகண்டர்.

**உக்கிர பாண்டியன்**—இவரது மற்றொரு பெயர் நெடுஞ்செழியன் கி.பி. இரண்டாவது நூற்றாண்டு (டாக்டர்

எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார்) கி.பி. முதல் நூற்றூண்டு (சர். டி. தேசிகாசாரியார்)

**உண்மைநெறி விளக்கம்**—உமாபதி சிவாசாரியார் இயற்றியது கி. பி. 1312 (திரு. டி. செல்வகேசவராய முதலியார்)

**உத்தமசோழன்** — இவனது மற்ரெரு பெயர் விக்ரம சோழன், ஆண்ட காலம் கி.பி 970-985 (திரு. சோம சுந்தர தேசிகர்)

**உபதேச ரத்தினமாலை**—மணவாள மாமுனிகள் இயற்றியது கி. பி. 15-ஆம் நூற்றூண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி).

**உபநிஷத்துக்கள்**—புராதனமான வேதாந்த சம்ஸ்கிருத நூல்கள். காலம் கி.மு. 600-700 (வின்செண்ட் ஸ்மித்) கி. மு. 800 - 500 (ஸ்ரீமான் திருவேங்கடாசாரியார், எம்.ஏ., எல் டி )

**உமறுப் புலவர்**—துலுக்கக் கவிராயர் சீரூர் புராணம் இயற்றியவர், கி.பி. 17-ம் நூற்றூண்டு. (தமிழ் லெக்சிகன் அகராதி)

**உமாபதி சிவாசாரியார்**—சங்கல்ப நிராகரணம் எழுதியவர், கி பி. 1313.

**உய்யவந்த தேவ நாயனுர்** — திருவுந்தியார் ஆசிரியர் கி பி. பன்னிரண்டாம் நூற்றூண்டு.

**உய்யவந்த தேவ நாயனுர்**—திருக்கடவூரில் வாழ்ந்தவர், திருக்களிற்றுப்படியார் இயற்றியவர் கி.பி. 1178.

**உரிச்சொல் நிகண்டு**—காங்கேயன் எழுதியது கி. பி. 17-ஆம் நூற்றூண்டின் ஆரம்பம். (திரு. வையாபுரி பிள்ளை)

**உவமான சங்கிரஹம்**—திருவேங்கட ஐயர் இயற்றியது கி.பி. 14-ஆம் நூற்றூண்டு.

**உறையூர்**—கி.பி. இரண்டாவது நூற்றூண்டில் சோழ ராஜதானியா யிருந்தது.

**எல்லப்ப நாவலர்**—தமிழில் பிரபோத சந்திரோதயம் இயற்றியவர் கி.பி. 14-ஆம் நூற்றூண்டு.

**எழுத்தச்சன்**—மலையாளக் கவி சுமார் கி. பி. 1626-ஆம் ஆண்டில் இருந்தவர் (கெ. சி. சேஷையர்)

**ஐஹோல்சாசனம்**—பூர்வீக காலத்திய முக்கிய சாசனங்களில் ஒன்று கி.பி. 634.

**ஒட்டக்கூத்தர்**—தமிழ்ப் புலவர், ராஜராஜ சோழன் உலா முதலிய நூல்கள் எழுதியவர். கி.பி. 12-ஆம் நூற்றாண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**ஒழிவிலொடுக்கம்**—கண்ணுடைய வள்ளலார் இயற்றியது கி.பி. 18-ஆம் நூற்றாண்டு.

**ஔரங்கஜீப்** - வடஇந்தியாவில் ஆண்ட மொகலாய அரசர், ஆண்டகாலம் 1658-1707 தென் இந்தியாவில் ஔரங்கபாத் அருகில் மரணம் கி.பி. 1707.

**ஔவையார்**—ஆதி காலத்தவர், காலம் கி.பி 150, (ஸ்ரீ. வி. ராமசந்திர தீட்சிதர்)

இப்பெயர்கொண்ட ஒரு பெண்மணி கி.பி. 12-ஆம் நூற்றாண்டிலிருந்தனர்.

**கங்க வம்சத்தார்**—ஆண்ட காலம் கி.மு. 184-72.

**கங்கைகொண்ட சோழன்**—இவருக்கு மற்றொரு பெயர், ராஜேந்திரன்-ஆண்டகாலம் கி.பி. 1013-1042 (சி.எஸ். ஸ்ரீனிவாசாசாரியார்)

**கச்சியப்ப முனிவர்**—தணிகைப் புராண ஆசிரியர். கி.பி. 18-ஆம் நூற்றாண்டு, மரணம் கி.பி. 1790.

**கச்சியப்பர்**—கந்த புராண ஆசிரியர், கி.பி. எட்டாம் நூற்றாண்டின் கடைசிபாகம் (கே. கி. சேஷையங்கார்)

**கண்டராதித்தர்**—திருவிசைப்பாவின் ஓர்பகுதி ஆசிரியர், சோழ அரசர், கி.பி. பத்தாம் நூற்றாண்டில் 948-954-ல் இருந்தவர் (சோமசுந்தர தேசிகர்) மற்றும் சிலர் 9-ஆம் நூற்றாண்டிலிருந்ததாக எண்ணுகின்றனர்.

**கண்ணுடையவள்ளலார்**—ஒழிவிலொடுக்கம் ஆசிரியர், காலம் கி.பி. 15-ஆம் நூற்றாண்டு. மற்றொரு குறிப்பின்படி கி.பி. 18-ஆம் நூற்றாண்டிலிருந்ததாக எண்ணப்படுகிறது.

**கண்வர்கள்**—ஒரு அரச வம்சத்தினர்—ஆண்ட காலம் கி.மு. 72-27, (ஸ்ரீ எஸ். திருவேங்கடாசாரியார், எம்.ஏ., எல்.டி.)

**கடியாரங்கள்**—முதல் உண்டாக்கப்பட்டது, கி.பி. 13-ம் நூற்றாண்டு.

**கதம்பர்**—அல்லது **கடம்பர்** ஓர் அரச வம்சத்தினர்-தென் இந்தியாவில், தோன்றியது சுமார் கி.பி. நாற்பதாம் நூற்றாண்டின் கடைசியில்.

**கந்தபுராணம்** — கச்சியப்ப சிவாசாரியார் இயற்றியது, சுமார் கி.பி. 1520 (திரு. செல்வகேசவராய முதலியார்)

**கபிலர்** — இன்னாநாற்பது ஆசிரியர் — மூன்றாவது சங்க காலம் கி.பி. முதல் நூற்றாண்டு, மற்றொரு குறிப்பின் படி கி.பி. 984.

**கபீர்தாஸ்**—மகம்மதியராகப் பிறந்த ராம பக்தர், கி.பி. 1386-1420.

**கம்ப நாடர்**—தமிழ் இராமாயண ஆசிரியர். காலம் கி.பி. 12-ஆம் நூற்றாண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி) ஸ்ரீ ராஜகோபால ஐயங்காரின் அபிப்பிராயப்படி கம்பராமாயணம் இன்றைக்கு 800-வருடங்களுக்கு முற்பட்டது. ஸ்ரீ கே. சி. சேஷ ஐயங்கார் அபிப்பிராயப்படி கி.பி. 807-815-இல் எழுதப்பட்டது. கி.பி. 1120-1200 (ஸ்ரீ மு. ராகவ ஐயங்கார்) கி.பி. 895 மற்றொரு அபிப்பிராயம்.

**கயாதரம்**—ஓர் நூல் கி.பி. 1650 (திரு வையாபுரி பிள்ளை.)

**கரிகாலச்சோழன்**—ஓர் பழய சோழ அரசன், ஆண்ட காலம் கி. பி. 50—96 (திரு. கனகசுந்தரம் பிள்ளை), ஸ்ரீமான் ராமசந்திர தீட்சதர் அபிப்பிராயம் கி.பி. முதல்நூற்றாண்டு; கி பி. 100 (ஸ்ரீ சி. எஸ். ஸ்ரீனிவாசாசாரியார்); கி. பி. இரண்டாம் நூற்றாண்டு (டாக்டர் கிருஷ்ணசாமி ஐயங்கார்; திரு. டி. எ. ராமலிங்க செட்டியார் அபிப்பிராயமும் இதுவே. கி. பி. நான்காவது அல்லது ஐந்தாவது நூற்றாண்டு (ஸ்ரீ சிலகமூர்த்தி பந்துலு; கி.பி. நான்காவது நூற்றாண்டு (ஸ்ரீ பி. டி. ஸ்ரீனிவாச ஐயங்கார்).

**கல்லாடனார்**—கல்லாடம் எனும் நூல் ஆசிரியர்—கடைச் சங்க காலம், முதலாவது நூற்றாண்டு.

**கல்ஹணர்**—ராஜதரங்கிணி எழுதியவர், இந்நூல் எழுதப் பட்டது 12-ஆம் நூற்றாண்டு என்பர்.

**கலிங்கத்துப்பரணி** — ஜெயங்கொண்டார் இயற்றியது. சுமார் கி. பி. 1063—1115—குலோத்துங்கசோழன் காலம் (சென்னை சர்வ கலா சாலை பதிப்பின்படி) கி.பி. 1111—1125-க்குள் எழுதப்பட்டதாக டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் அபிப்பிராயம்.

**கலியுகம்**—ஆரம்பம் கி.மு. 3101 - பெடரேட் இந்தியா பிரகாரம்-மற்றொரு கணக்கின்படி கி.மு. 3137.

**கனிஷ்கர்**—வட இந்தியாவில் ஆண்ட அரசர், ஆண்ட காலம் கி.பி. 120—160 (ஸ்ரீ துரைசாமி அவர்கள்)
கி.பி. 78 மற்றொரு குறிப்பு.
இவர் ஆள ஆரம்பித்த காலம்:
கி.பி. 78—120 (வின்செண்ட் ஸ்மித் துரை)
கி.பி. 78—123 (ஸ்ரீ எஸ். திருவேங்கடாசாரியார், எம்.ஏ., எல்.டி.)

**காசிவிஸ்வநாத முதலியார்**—டம்பாசாரி விலாசம் எழுதியவர், கி.பி. 19-ம் நூற்றாண்டின் பின்பாகம்.

**காஞ்சி புராணம்**—கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் எழுதப் பட்டது. சிவஞானமுனிவரும், கச்சியப்பமுனிவரும், இயற்றிய நூல் (தமிழ் லெக்சிகன் அகராதி)

**காரிகை**—அமிர்தசாகரர் இயற்றிய நூல் கி.பி. 11-ஆம் நூற்றாண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**காளமேகப் புலவர்**—கி.பி. 15-ஆம் நூற்றாண்டு (திரு. செல்வகேசவராய முதலியார்) கி.பி. 17-ம் நூற்றாண்டு (கி. ரகுநாதன் பி.ஏ., எல்.டி.)

**காளிதாசன்**—சம்ஸ்கிருத நாடகாசிரியர் — சுமார் கி.பி. 375—475. (டாக்டர் எஸ். ஆர். பெல்வேகர் அமெரிகா ஹார்வர்ட் சர்வ கலா சாலை ஆசிரியர்)
கி. பி. 5-ஆம் நூற்றாண்டு (சாமி வேதாசலம்)
கி. பி. 400, (ஜி. ஹாட்ஜ்)

**கிருஷ்ணதேவராயர்**—*விஜயநகர அரசர், ஆண்டகாலம் கி.பி.* 1509—1530.

**கிருஷ்ண பாகவதர்** — *தஞ்சாவூர், தமிழில் ஹரிகதை செய்து பிரசித்தி பெற்றவர், கி.பி.* 1847—1903.

**கிருஷ்ணன்**—*ராஷ்டிரகூட அரசன், எல்லோராவில் கைலாச கோவில் நிர்மாணம்செய்தவன் கி.பி.* 757—773.

**கில்ஜி வம்சத்தார்**—*வட இந்தியாவில் ஆண்ட மகம்மதிய அரசர்கள், ஆண்டகாலம் கி.பி.* 1290—1320.

**கிழக்கு இந்தியா கம்பெனி** — *ஆரம்பம் கி.பி.* 1620, *(சி. எஸ். ஸ்ரீனிவாசாசாரியார்) முடிவு கி.பி.* 1857.

**கீழச் சளுக்கியர்**—*கிழக்கு சளுக்கியர்கள்—தலை அரசன் விஷ்ணுவர்த்தனன், தலைநகர் வெங்கி, பிறகு ராஜமஹேந்திரபுரம், ஆளுகை ஆரம்பம் கி.பி.* 610.

**குகை நமச்சிவாயர்** — *அருணகிரி அந்தாதி ஆசிரியர், கி.பி.* 18-*ஆம் நூற்றாண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)*

**குணவீர பண்டிதர்**—*நேமிநாதம் எனும் நூல் ஆசிரியர், கி.பி.* 18-*ஆம் நூற்றாண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)*

**குப்தர்கள்**—*ராஜ்ய ஆரம்பம் கி.பி.* 320.

**குப்ஜவிஷ்ணுவர்த்தனன்**—*கிழக்கு சளுக்கிய அரசன், கி.பி.* 615.

**குமரகுருபர ஸ்வாமிகள்**—*நீதிநெறி விளக்கம் முதலிய பல நூல்கள் இயற்றிய ஆசிரியர்—கி.பி.* 17-*ஆம் நூற்றாண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி) சுமார் கி.பி.* 1630 *(சென்னை சர்வகலா சாலை பதிப்பு) கி. பி.* 16-*ஆம் நூற்றாண்டு (திருப்பனந்தாள் ஆதீனப் பதிப்பு)*

**குமாரகுப்தன்**—*ஓர் குப்த அரசன், ஆண்ட காலம் கி.பி.* 425—455.

**குருநமச்சிவாயர்**-*அண்ணாமலைவெண்பா ஆசிரியர், கி.பி* 16-*ஆம் நூற்றாண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)*

**குலசேகர பாண்டியன்**—*தற்கால மதுரை நகரை ஸ்தாபித்தவர், கி.மு* 9-*ஆம் நூற்றாண்டு (பண்டித சவரிராயர்) கி.பி.* 12-*ஆம் நூற்றாண்டு (திரு. சேது பிள்ளை அவர்கள்)*

**குலசேகர பராக்கிரம அடிகள் சொக்கன்**—பாண்டிய அரசன், கி.பி. 1572, (கவர்ன்மென்ட் எபிக்ராபிஸ்ட்)

**குலசேகரப் பெருமாள்**—பாண்டிய அரசன், கி.பி. 1543, (கவர்ன்மென்ட் எபிக்ராபிஸ்ட்)

**குலோத்துங்க சோழன் I**—ஆண்ட காலம் கி.பி. 1070—1118 (சோமசுந்தர தேசிகர்) — இவனது மற்ற பெயர்கள்—சுங்கம் தவிர்த்த சோழன், திரிபுவன சக்ரவர்த்தி.

**குலோத்துங்கன் III**—ஓர் சோழ அரசன், இவனுக்கு திரிபுவன வீரன் என்றும் பெயர் உண்டு, ஆண்ட காலம் கி.பி. 1178—1215.

**குற்றாலத்துப் புராணம்**—கூடராசப்ப கவிராயர் எழுதியது, கி.பி. 1716—(திரு. அநவரத விநாயகம் பிள்ளை).

**குஷனர்**—வட இந்தியாவில் ஆண்ட ஓர் அரச வம்சத்தினர், ஆளுகை கி.பி. 50—225 (சி. எஸ். ஸ்ரீனிவாசாசாரியார்).

**கூரம் சாசனம்**—இதுதான் இதுவரையில்கண்டுபிடிக்கப்பட்ட தாமிரசாசனங்களில் முற்பட்டது. காலம் சுமார் கி.பி. 690.

**கூன்பாண்டியன்** — அல்லது நின்றசீர் நெடுமாறன், அரிகேசரி மாறவர்மன், சுந்தரபாண்டியன் எனும் பெயர்களுமுண்டு, சுமார் கி.பி. 630, இவன் கி.பி. 8-ஆவது நூற்றாண்டின் கடைசியிலும், 9-ஆவது நூற்றாண்டின் முதலிலும் ஆண்டதாக டாக்டர் சர்மா சாஸ்திரியார் அபிப்பிராயப்படுகிறார்.

**கைலாசநாதர் கோயில்** — காஞ்சிபுரத்திலுள்ள பூர்வீக பல்லவ கட்டடம். கட்டப்பட்ட காலம் சுமார் கி.பி. 670.

**கொடிக்கவி** — உமாபதி சிவாசாரியார் எழுதிய நூல் கி.பி. 1310 (திரு. செல்வ கேசவராய முதலியார்).

**கொல்லம் ஆண்டு**—மலையாள வருஷக் கணக்கு, ஆரம்பம் கி.பி. 824.

**கொற்கை**—கி.மு. ஆறும் நூற்றாண்டில் பாண்டிய ராஜ தானியாயிருந்தது.

**கோச்சடையன்**—பாண்டிய அரசன், அரிகேசரிமாறன் புதல்வன், சுமார் கி. பி. 700 (திரு. சேது பிள்ளை அவர்கள்.)

**கோச்செங்கண்ணன்** — சோழ அரசன், கி.பி. 5-ஆம் நூற்றாண்டு, (ஸ்ரீ மு. ராகவ ஐயங்கார்,) சுமார் கி.பி. 450 (ஸ்ரீ பி. டி ஸ்ரீனிவாச ஐயஙகார்.)

**கோபாலகிருஷ்ண பாரதி**—நந்தனார் சரித்திர கீர்த்தனை ஆசிரியர், கி.பி. 19-ஆம் நூற்றாண்டு.

**சங்க காலம்**— III, கி. பி. மூன்றாவது நூற்றாண்டு. கி.பி. முதல் நூற்றாண்டு, ஸ்ரீ பி. டி. ஸ்ரீனிவாச ஐயங் கார்.

**சங்கராசாரியார்**—ஆதி-கி.பி. 788—820.
கி.பி. ஆறும் நூற்றாண்டு, ஸ்ரீ டிரைலாங்.
கி.பி. 635—655 ஜெ. எப். பிளீட்.

**சங்கர நமச்சிவாயர்** — நந்நூல் விரித்தியுரை ஆசிரியர், சுமார் கி பி. 1770, (திரு. செல்வ கேசவராய முதலி யார்.)

**சடகோபதாசர்**—அரிசமய விளக்க ஆசிரியர், கி.பி. 17-ம் நூற்றாண்டு.

**சதி** — உடன்கட்டை ஏறுதல் தவிர்க்கப்பட்டது. கி.பி. 1829.

**சந்திரகுப்தன் I**—ஆள ஆரம்பித்தது கி.மு 312 இவர் சிசுநாகர்களைத் தோற்கடித்து, பாடலிபுரத்தை பிடித்தது சுமார் கி.பி. 321.

**சந்திரகுப்தன் II**—கி.பி. 375, காளிதாசன் இவன் சபை வித்வானு யிருந்ததாக சிலர் அபிப்பிராயப்படுகின்ற னர்.

**சபாபதி முதலியார்**—காஞ்சீபுரம், பெரிய புராண வசன் ஆசிரியர் கி.பி. 1760.

**சம்பந்தர்**—திருஞானசம்பந்தர்—சைவ சமய ஆசாரியர், சுமார் கி.பி. 650. கி. பி. 634—650. (சிதம்பரனார்)

கி.பி. ஏழாம் நூற்றாண்டு (திருவனந்தபுரம் சுந்தரம் பிள்ளை அவர்கள்).

**சம்பந்த சரணாலயர்**—கந்த புராணச் சுருக்க ஆசிரியர், கி.பி. 16-ம் நூற்றாண்டு.

**சம்ஸ்கிருத நாடகம்**—ஆரம்பம் சுமார் கி.மு. இரண்டாம் நூற்றாண்டு (டாக்டர் கெய்த)

**சமுத்திரகுப்தன்**—குப்த அரசன், ஆண்டது:—
கி.பி. 330—350 பெர்கூசன் துரை.

கி.பி. 330—375 ஸ்ரீ எஸ். திருவேங்கடாசாரியார், எம்.ஏ., எல் டி.

கி.பி. 335—375 ஸ்ரீ ஆர். ராமையர்.

இவரது அலஹாபாத் (பிரயாகை) கல்வெட்டு கி.பி. 4-வது நூற்றாண்டு, வின்செண்ட்ஸ்மித்.

**சரபோஜி** — தஞ்சாவூரிலாண்ட மஹாராஷ்டிர அரசன், கி.பி. 19-ஆம் நூற்றாண்டு.

**சளுக்கியர்**—பூர்விகர், பாதாமியில் ஆண்டவர்கள், கி.பி. 550—655-பிற்பட்டவர், கல்யாணியில் ஆண்டவர்கள் கி.பி. 970 — 1030, - கடைசி காலத்தவர் (முக்கிய அரசன சோமேஸ்வர விக்ரமாதித்யன்) காலம் கி.பி. 1076—1126.

இவர்களது ஆளுகை முடிவு கி.பி. 1200 (ஸ்ரீ எஸ். திருவேங்கடாசாரியார்).

**சாகுந்தலம்** — மானியர் வில்லியம்ஸ், சம்ஸ்கிருதத்திலிருந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தது கி பி. 1789.

**சாணக்கியன்**—அர்த்தசாஸ்திர ஆசிரியர் கி.பி. 4-ம் நூற்றாண்டு, இவர் இந்நூலில் கோயில்களையும் விக்ரஹங்களையும் குறிப்பிட்டிருக்கிறார், (ஸ்ரீ பி. டி. ஸ்ரீனிவாச ஐயங்கார்).

**சாதகாலங்காரம்**—கீரனூர் நடராஜர் எழுதிய நூல், கி பி. 1665, (தமிழ் லெக்சிகன் அகராதி).

**சாந்தலிங்க சுவாமிகள்**—கொலைமறுத்தல் எனும் நூலாசிரியர், கி.பி. 17-ம் நூற்றாண்டு, (தமிழ் லெக்சிகன் அகராதி).

**சாமா சாஸ்திரியார்**—பாடகர், கி.பி. 19-ம் நூற்றாண்டு.

**சாரக வைத்ய சாஸ்திரம்** — சமஸ்கிருத வைத்ய நூல். காலம் சுமார் கி.மு. 500.

**சாருதேவி** — இப்பெண்மணி சுமார் கி.பி. 300-ல் ஒரு விஷ்ணு கோவிலுக்கு பூதானம் செய்ததாகக் குறிக்கப்பட்டிருக்கிறது.

**சாலமோன்**—பைபிலில்கண்ட யூத அரசன், காலம் சுமார் கி மு. 1000.

**சாலிவாகன சகாப்தம்**—ஆரம்பம் கி.பி. 78.

**சான்சி**—(Sanchi) இங்குள்ள ஸ்தூபத்தின் தெற்குவாயில் தோரணம் சுமார் கி.மு. 150-ல் கட்டப்பட்டதாக பெர்கூசன் துரை கூறுகிறார்.

**சாஹித்யதர்ப்பணம்**—ஓர் சமஸ்கிருத நூல், சுமார் கிபி. 1383-ல் எழுதப்பட்டது.

**சாஹு**—மஹாராஷ்டிர அரசன் கி.பி. 1707—1748.

**சித்தாந்த சிகாமணி**—சிவப்பிரகாசர் எழுதிய நூல், கிபி. 17-ம் நூற்றாண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**சிதம்பரப்பாட்டியல்**—பரஞ்சோதியார் எழுதிய நூல், கி.பி. 16-ம் நூற்றாண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**சிதம்பர ரேவணசித்தர்**—அகராதி நிகண்டு ஆசிரியர், கி.பி. 16-ம் நூற்றாண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**சிம்ஹவிஷ்ணு**—ஓர் பல்லவ அரசன், காலம் கி.பி. 7-ம் நூற்றாண்டு, (வின்சென்ட்ஸ்மித்) கி. பி. 590 (ஸ்ரீ மு. ராகவ ஐயங்கார், திரு. சேது பிள்ளை).

**சிலப்பதிகாரம்** — இளங்கோவடிகள் இயற்றிய நூல் —
கி.பி. இரண்டாம் நூற்றாண்டு, (திரு. சவுரிராயர்).
கி.பி. 113 (திரு. நல்லசாமி பிள்ளை அவர்கள்).
கி.பி. 149 (திரு. எம். எஸ். சுப்பிரமண்ய பிள்ளை).
கி.பி. 500 (புரொபசர் ஸ்ரீமான் ரங்காசாரியார், எம்.ஏ).
(பி. டி. ஸ்ரீனிவாச ஐயங்கார்).
கி.பி. 750 (ஸ்ரீ கோபிநாத் ராவ்).

**சிலாதித்யன்**—வட இந்திய அரசன், இவனது மற்ற பெயர்கள் ஸ்ரீ ஹர்ஷன், ஹர்ஷதேவன், ஹர்ஷவர்த்தனன், என்பனவாம், பிறந்தது 24 ஜூன் கி.பி. 590 கலிங்கத்தை ஜெயித்தது கி. பி. 643, அரசாண்ட காலம் கி.பி. 606—647 (ஸ்ரீ ஆர். ராமையர்).

இவன் கி.பி. 643-ல் பௌத்தர்களுக்கும், ஜைனர்களுக்கும், பிராமணர்களுக்கும் ஒரு பெரிய கூட்டம் கூட்டியதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

**சிவஞானசித்தியார்**—அருணகிரி சிவாசாரியார் இயற்றியது. கி.பி. 1300 (டாக்டர் சாமிநாத ஐயர் அவர்கள்.)

**சிவஞானபோதம்**—மெய்கண்டார் இயற்றிய நூல் கி.பி. 1223.

**சிவஞானமுனிவர்** — சிவஞானபோதத்திற்கு திராவிட பாஷ்யம் செய்தவர், கி.பி. 18-ம் நூற்றாண்டு, மரணம் 1785, (தமிழ் லெக்சிகன் அகராதி).

**சிவப்பிரகாசர்**—பிரபுலிங்க லீலை ஆசிரியர், கி.பி. 17-ம் நூற்றாண்டு, (தமிழ் லெக்சிகன் அகராதி).

**சிவபுண்ணியத் தெளிவு** — உமாபதி சிவாசாரியார் எழுதியது கி.பி. 13-ம் நூற்றாண்டு, (தமிழ் லெக்சிகன் அகராதி)

**சிவரகசியம்**—ஒப்பிலாமணி தேசிகர் இயற்றியது, கி.பி. 1718, (தமிழ் லெக்சிகன் அகராதி).

**சிவஸ்கந்தவர்மன்**—ஓர் பல்லவ அரசன், ஆண்ட காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டு, (வின்சென்ட்ஸ்மித்,) மூன்றாவது நூற்றாண்டு, (ஸ்ரீ பி. டி. ஸ்ரீனிவாச ஐயங்கார்).

**சிவாஜி** — பிரபலமான மகாராஷ்டிர அரசன், பிறந்தது கி.பி. 1630 — மரணம் கி.பி. 1680 — மற்றொரு அபிப்பிராயம் கி.பி. 1627.

**சிவாயமாறன்** — ஓர் பாண்டிய அரசன், கி. பி. 1615 (கவர்ன்மெண்ட் எபிக்ராபிஸ்ட்).

**சிறுத்தொண்டர்** — அறுபத்து நாயன்மார்களிலொருவர் வாதாபியைப் பிடித்தது கி.பி. 642.

**சீகாழிக்கோவை**—சீகாழிப் புராணம், காழி அருணாசலக் கவிராயர் எழுதியது—அவர் காலம் 1712—1719.

**சீயகங்கன்** — நன்னூல் ஆசிரியரைப் போதித்தவர்— கி.பி. 13-ம் நூற்றாண்டு, (தமிழ் லெக்சிகன் அகராதி.)

**சீறூர் புராணம்**—உமறுப் புலவர் எழுதியது கி.பி. 17-ம் நூற்றாண்டு, (தமிழ் லெக்சிகன் அகராதி).

**சுந்தரசோழன்**—ஓர் சோழ அரசன் அல்லது இரண்டாவது பராந்தகன்-ஆண்ட காலம், கி.பி. 954-966.

**சுந்தர பாண்டியனும் அவனது சகோதரன் வீர பாண்டியனும்**—அலாவுதீன் கில்ஜி காலம், கி.பி 1314.

**சுந்தர பாண்டியன்** — பாண்டிய அரசன், ஆண்டது கி.பி 1251—1271, இவன் மரண மடைந்தது கி.பி. 1293 என்று சிலர் கூறுகின்றனர். இவனுக்கு ஜடாவர்மன், சுந்தரபாண்டியன் என்றும் பெயர், சுந்தர பாண்டியன் — குலசேகர பாண்டியன் ஆண்டது கி.பி. 1175—1200 (சர். டி. தேசிகாசாரியார்)

**சுந்தரபண்டியன் மாரவர்மன்**—ஜடாவர்மன், குலசேகரன் ஆண்டது கி.பி. 1220-1250, (சர். டி. தேசிகாசாரியார்)

**சுந்தரமூர்த்தி நாயனர்**—தேவாரம் பாடிய சைவ சமயாசாரியார், கி.பி. 828 மரணம் (திரு. ஸ்ரீனிவாசம்பிள்ளை அவர்கள்), காலம் கி.பி. 9-ம் நூற்றாண்டு, (ஸ்ரீ வி. ஆர். தீட்சிதர்), கி.பி. 8-ம் நூற்றாண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி) சுமார் கி.பி. 850, (சென்னை சர்வகலா சாலை பதிப்பு).

**சுப்பிரதீபக் கவிராயர்**—விரலிவிடு தூது ஆசிரியர், கி.பி. 18-ம் நூற்றாண்டு.

**சுப்பிரமண்ய தீட்சிதர்** — தமிழ் பிரயோக விவேக ஆசிரியர், கி.பி. 17-ம் நூற்றாண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**சுவாமிநாத தேசிகர்**—இலக்கணக் கொத்து ஆசிரியர், கி.பி. 18-ம் நூற்றாண்டு.

**சுஸ்ருத**—ஓர் ஆயுத சிகிச்சை வைத்ய நூல்—சமஸ்கிருதம் சுமார் கி.மு. 500.

**சூடாமணி உள்ள முடையான்** — திருக்கோஷ்டி நம்பி எழுதியது கி.பி. 12-ம் நூற்றாண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**சூடாமணி நிகண்டு** — மண்டல புருஷர் இயற்றியது. கி.பி. 16-ம் நூற்றாண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**சூதசம்ஹிதை** — தமிழில் இயற்றியவர் வ. தேவராஜ பிள்ளை கி.பி. 1851 (திரு. அநவரத விநாயகம் பிள்ளை)

**சூளாமணி**—ஆசிரியர் தோலா மொழித் தேவர் கி.பி. 7-ம் நூற்றாண்டு—சிலர் இவர் காலம் 10-ம் நூற்றாண்டென்பர்.

**செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்**—சிவஞான முனிவர் இயற்றியது, கி.பி. 1773 (திரு. அநவரத விநாயகம் பிள்ளை)

**செங்குட்டுவன்**—சேர அரசன் — காலம் கி.பி. இரண்டாவது நூற்றாண்டு (டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார்) கி. பி. ஐந்தாம் நூற்றாண்டு (ஸ்ரீ பி. டி. ஸ்ரீனிவாச ஐயங்கார்)

**செஞ்சிக்கோட்டை**—கட்டப்பட்டது. கி.பி. 1445 இதை மகம்மதியர்கள் பிடித்தது கி பி. 1698.

**சேதுபுராணம்**—நிரம்ப அழகிய தேசிகர் இயற்றியது. கி.பி. 16-ஆம் நூற்றாண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**செப்பு நாணயங்கள்** — முதல் முதல் உபயோகிக்கப்பட்டது கி.பி. 1329 (?)

**சேரமான் நாயனார்**—கி.பி. 9-ம் நூற்றாண்டின் முற்பாதி, (திரு. டி. ராமலிங்கம் பிள்ளை அவர்கள்)

**சேவப்ப நாயக்கர்**—தஞ்சாவூரிலாண்ட நாயக்க அரசர். ஆண்ட காலம் கி.பி. 1549—1572.

**சென்னபட்டணம்**—இங்கு ஆங்கிலேயர் கோட்டை கட்ட ஆரம்பித்தது கி.பி. 1640.

**சென்னை மல்லையர்**—சிவசிவ வெண்பா ஆசிரியர், கி.பி. 1768 (தமிழ் லெக்சிகன் அகராதி)

**சேக்கிழார்**—பெரிய புராண ஆசிரியர்—சுமார் கி.பி. 1014-1032, கி.பி. 11-ம் நூற்றாண்டின் பிற்பாதி (ஸ்ரீ கே. சி. சேஷையர்) கி. பி. 13-ம் நூற்றாண்டு (திரு. விபுலானந்தர்)

**சேந்தனுர்**—ஓர் பாண்டிய மன்னன், கி.பி. 7-வது நூற்ருண்டின் பிற்பகுதி (திரு. சேது பிள்ளை அவர்கள்)

**சைதன்யர்**—சைதன்ய மதப் பிரிவை ஸ்தாபித்தவர்—காலம் 1485—1527 (டி. டி. ஹன்டர்)

**சோமசம்பு சிவாசாரியார்**—சைவ பத்ததி ஆசிரியர்—கி.பி. 11-ம் நூற்ருண்டின் பிற்பகுதி (தமிழ் லெக்சிகன் அகராதி)

**சோமேஸ்வரன்** — ஹொய்சால அரசன், சுமார் கி.பி. 1236.

**சோழசேரபாண்டியர்** — இம்மூவேந்தர்கள் தமிழ் அகத்தை ஆண்ட காலம் சுமார் கி.பி. 100 — 300 வரை (ஸ்ரீ சி. எஸ். ஸ்ரீனிவாசாசாரியார்)

**சோழமண்டல சதகம்**—ஆத்மநாததேசிகர் இயற்றியது. கி.பி. 17-ம் நூற்ருண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி) கி. பி. 1650 — 1728-க்குள்ளாக (சென்னை கலாசாலை பதிப்பு.)

**ஞானசம்பந்தர்** — சிவபோகசாரம் ஆசிரியர், தர்மபுரம் மடத்தை ஸ்தாபித்தவர், கி.பி. 15-ம் நூற்ருண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**ஞானப்பிரகாசர்**—திருமழபாடி புராண ஆசிரியர், கி.பி. 18-ம் நூற்ருண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**ஞானப்பிரகாசர்** — சிவஞானசித்தியார் ஆசிரியர்—கி.பி. 18-ம் நூற்ருண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**ஞானவரோத பண்டாரம்**—உபதேசகாண்ட ஆசிரியர், கி.பி. 16-ம் நூற்ருண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**டச்சுக்காரர்** — சென்னை ராஜதானிக்கு முதல் முதல் வந்தது கி.பி. 1652.

**டாலமி**—மரித்தது கி.பி. 163.

**டெரையஸ்**—பர்ஷியா தேசத்து அரசன், சிந்து நதிப் பிரதேசத்தை ஜெயித்தது சுமார் கி.மு. 500—இது முதல் பர்ஷியா தேசத்து சில்பம் இந்தியாவில் பரவியது.

**டோக்ளாக் வம்சம்**—டில்லியில் ஆண்ட மகம்மதிய வம்சம் கி.பி. 1326—1525

**தக்கோல யுத்தம்**—ராஷ்டிரகூட அரசனை மூன்ருவது கிருஷ்ணன், சோழர்களை முறியடித்தது, கி.பி. 940.

**தசரூபகம்**—ஓர் சமஸ்கிருத நூல் கி.பி. 10-ம் நூற்ருண்டின் பின்பாகம்.

**தண்டின்**—ஓர் சமஸ்கிருத ஆசிரியர், கி.பி. 6-ம் நூற்ருண்டு.

**தணிகைப் புராணம்**—கச்சியப்ப முனிவர் இயற்றியது, கி.பி. 19-ம் நூற்ருண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**தத்தகாமினி**—(தாதுகாமினி ?) விஜயவம்சத்து இலங்கை மன்னன், அநுராஜபுரத்தில் ஆண்ட காலம் சுமார் கி.மு. 200.

**தத்துவப்பிரகாசர்**—தத்துவப் பிரகாச ஆசிரியர் 16-ம் நூற்ருண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**தத்துவராயர்**—பாடுதுறை ஆசிரியர்—கி.பி. 16-ம் நூற்ருண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**தத்துவராயர்**—நெஞ்சுவிடுதூது ஆசிரியர், கி.பி. 11-ம் நூற்ருண்டு.

**தந்திதுர்க்கன்**—ராஷ்டிரகூட அரசன் ஆண்டது, கி.பி. 753—775.

**தந்திவர்மன்**—பல்லவ அரசன்- காலம் கி.பி. 9-ம் நூற்ருண்டின் தொடக்கம். (திரு சேது பிள்ளை அவர்கள்)

**தமிழ் கல்வெட்டுகள்**—ஆரம்பம் சுமார் கி.பி. 6-ம் நூற்ருண்டு (ஸ்ரீ பி. டி. ஸ்ரீனிவாச ஐயங்கார்)

**தலக்காடு**—மைசூர் ராஜ்யத்திலுள்ளது, கி.பி. 1117-ஆம் ஆண்டில் விஷ்ணுவர்த்தனனுடைய ராணுவத் தலைவனை கங்கராஜா என்பவனுல் பிடிக்கப்பட்டது.

**தலையாலங்காடு யுத்தம்**—சுமார் 400—500 கி.பி-க்குள்ளாக—பாண்டியன் நெடுஞ்செழியன் சேரர்களை முறியடித்தது.

**தாண்டவராய முதலியார்** — தமிழில் பஞ்ச தந்திரம் எழுதியவர், இப்புஸ்தகம் அச்சிடப்பட்டது சுமார் கி.பி.1825.

**தாயுமான ஸ்வாமிகள்** — தாயுமானவர் பாடல் எனும் நூல் இயற்றியவர், கி.பி. 1705—1742 (திருமுத்துத் தாண்டவராய பிள்ளை)

**தியாகராஜர்**—பிரபல சங்கீத வித்வான், பிறப்பு கி.பி. 1767, மரணம் கி.பி. 1847.

**திராவிடர்கள்**—ஜாவா, கம்போதியா முதலிய பிரதேசங்களில் குடியேறியது, கி.பி. 5 அல்லது 6-ம் நூற்றாண்டு (சென்டார்சி, எல். எல். பி.)

**திரிகூடராசப்ப கவிராயர்** — குற்றால ஸ்தல புராணம் பாடியவர், கி.பி. 18-ம் நூற்றாண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**திரிநேத்திர பல்லவன்**—காலம் கி.பி. 4-வது நூற்றாண்டு, (தமிழ் லெக்சிகன் அகராதி)

**திருக்களிற்றுப் படியார்** — உய்யவந்ததேவ நாயனார் இயற்றிய நூல் கி.பி. 1178 (திரு. டி. செல்வகேசவராய முதலியார்)

**திருக்காளத்தி புராணம்** — ஆனந்தக்கூத்தர் எழுதியது கி.பி. 16-ம் நூற்றாண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**திருக்குருகைப்பெருமாள் கவிராயர்**—மாறன் அலங்காரம் ஆசிரியர் கி.பி. 16-ம் நூற்றாண்டு, (தமிழ் லெக்சிகன் அகராதி)

**திருக்குறள்** — திருவள்ளுவர் இயற்றியது கி.பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டு (ஸ்ரீ வி. ராமசந்திர தீட்சிதர்)

**திருத்தக்கதேவர்** — ஜீவகசிந்தாமணி ஆசிரியர் — கி. பி. 9-ம் நூற்றாண்டு (தமிழ் லெக்சிகன் அகராதி)

**திருநாவுக்கரசு ஸ்வாமிகள்**—அல்லது அப்பர்—தேவாரம் பாடிய காலம் சுமார் கி.பி. 650—சிலர் கி.பி. 620 என்பர்.

